மடாலய வெளியீடு—க



உ
சிவமயம்

நன்னிலம்
ஸ்ரீ நாராயண சுவாமிகளின் மாணாக்கரும்
கைவல்லியநவநீத நூலாசிரியருமான

# ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் சரித்திரம்

இது
நன்னிலம் ஸ்ரீ சதானந்த சுவாமிகளால்
இயற்றப்பெற்றது.

நன்னிலம்
ஸ்ரீ நாராயணதாண்டவராய சுவாமிகள்
மடாலயத்தின் தலைவர்
மகா. கோவிந்த சுவாமிகளால்
வெளியிடப்பெற்றது.

1960

 [விலை 50 காசுகள்.




உ

சிவமயம்

நன்னிலம்

ஸ்ரீ நாராயண சுவாமிகளின் மாணுக்கரும்

கைவல்லியநவநீத நூலாசிரியருமான

# ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் சரித்திரம்

இது

நன்னிலம் ஸ்ரீ சதானந்த சுவாமிகளால்

இயற்றப்பெற்றது.

நன்னிலம்

ஸ்ரீ நாராயணதாண்டவராய சுவாமிகள் மடாலய

வெளியீடு.

1960

 [விலை 50 காசுகள்.

10-4

# முகவுரை

உலகின்கண் சீவர்கள் விரும்புவது துக்கத்தின் நீக்கமும் சுகத்தின் பிராப்தியுமேயாகும் என்பது யாவருமுணர்ந்த விஷயமேயாம். இத்தகைய நிலையையே மோக்ஷம் அஃதாவது வீடு என்று அறிவிற் சிறந்த ஆன்றோர்கள் கூறியிருக்கின்றனர். புருடார்த்தங்களாகிய அறம், பொருள், இன்பம், பேரின்ப வீடு என்னும் நான்கனுள் வீடே சிறந்ததாம், என்றும், மாசற விசாரிக்குங்கால் வீடே மற்ற அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றின் சிறந்த வடிவமுமாகும் என்றும், ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் அவிரோதவுந்தியார் என்னும் நூலில் "அறம்பொரு ளின்பம்வீ டாயவோர் நான்கிற், சிறந்த பயன்வீடென் றுந்தீ பற, தேரின்வீ டேயெலா முந்தீபற." என்னும் வாக்கியங்களாற் கூறியிருக்கின்றனர். ஆகவே அத்தகைய சர்வ புருடார்த்த வடிவமான வீட்டைத் தானும் அடைந்து உலக மக்களையும் அடையச் செய்வது செயற்கரிய செய்யும் சான்றோர்களின் செயலாம். அவ்வாறு உலகுபகாரஞ் செய்வதே சான்றோர்களின் செயல் என்பதை ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் கைவல்லிய நவநீத நூலில் "நல்லவனே கேள் உலகுபகாரம் ஞானிகள் விவகாரம்" என்னும் வாக்கியத்தாலுணர்த்தியிருக்கின்றனர். ஆகவே அவ்வாறு அற்புத உலகுபகார மூர்த்தியாயிருந்த நன்னிலம் ஸ்ரீ தாண்டவராய சுவாமிகளின் சரிதத்தை அறிதல் நற்பேறுறற்கு நற்சாதனமாம் என்னுங் கருத்துடன் அச்சரிதத்தை அறியவேண்டுமென்று மிகவும் முயன்று பல நூல் நிலையங்களுக்குஞ் சென்று ஆங்காங்குள்ள ஓலையேட்டுப் பிரதிகளையும், புத்தகப் பிரதிகளையும் ஆராய்ந்து தேடியதில் கிடைத்த புராதனமான ஏட்டுப் பிரதியின்படி பதிப்பித்த புராதனமான புத்தகப் பிரதியின்படியுள்ள நன்னிலம் ஸ்ரீ சதானந்த சுவாமிகளால் திராட்சா பாகமாக 51 தமிழ்ச் செய்யுள் வடிவியற்றப்பெற்ற ஸ்ரீ தாண்டவராய சுவாமிகளின் சரிதத்தை அச்சிற்பதிப்பிக்கின்றனன். மக்களனைவரும் அறிந்து பெறும் பேறனைத்தும் பெறுவார்களாக.

இங்ஙனம்:

*மகா கோவிந்த சுவாமி*

தலைவர்.

ஸ்ரீ நாராயண தாண்டவராய சுவாமிகள் மடம்

நன்னிலம்.

தஞ்சை மாவட்டம்

## துதிகள்

கைவல்லிய நவநீதத்தின் உரையாசிரியரான சிதம்பரம்
ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள் இயற்றியது

### கலிநிலைத்துறை

மாண்ட மெய்ப்பொருள் கையிலா மலகமே யென்ன
ஈண்டி யாவரு மெளிதினி லுணர்தர வெவையும்
தூண்டு சோதியே வந்தென் றியாவருந் துதிக்கும்
தாண்ட வப்பெருந் தண்ணருண் மூர்த்திதாள்
[சார்வாம்.

நோயிலூர் மகா. கோவிந்தசுவாமி இயற்றியது

### எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சீர்மிகுங் கங்கைச் சீதள மென்னத்
திகழுமெய்ஞ் ஞானசீ தளஞ்செய்
பேர்மிகுங் கைவல் லியநவநீதம்
பிறப்பிறப் பறப்பரிந் தியற்றித்
தார்மிகுந் தரும நன்னில மருவும்
தாண்டவ ராயமா முனிவன்
சார்மிகுங் குருநா ராயண முனிவன்
தாண்மலர் முடிமிசை யணிவாம். 2

10-4



## கைவல்லிய நவநீதத்திற்குக் கோவிலூர் ஸ்ரீபொன்னம்பல சுவாமிகள் இயற்றிய உரை நூலில் உள்ள உரைச்சிறப்புப் பாயிரத்தின் பகுதி

"மதுக் காடெனப் பெயரிய
திருநன் னிலத்தொளி திகழ்தகு மரபில்
வருமொரு தாண்டவ ராயநா மத்தோன்
நாரா யணப்பெயர் நயந்தநன் ஞசான்
சாராத் தனதுயர் சமாதியோ கத்திடை
அன்பநீ யொருவே தாந்தநூ லறைகுதி
என்பதா வருளிய வின்னுரை கடைப்பிடித்
தாய்ந்தபன் னூற்பொரு ளனைத்தையுந் திரட்டிநீர்
வாய்ந்தகை வல்லிய மாநவ நீதமாம்
பெயரிற் புகன்றனன்"

## விறைசை ஸ்ரீ அருணசல சுவாமிகள் உரை நூலில் உள்ள உரைச் சிறப்புப் பாயிரத்தின் பகுதி

"நன்னிலை மாடமார் நன்னில மதனிற்
செந்தண லோம்புந் திறந்திரி யாதுயர்
அந்தணர் குலத்தில் அவதரித் தருளிய
நாரா யணகுரு நாண்மலர்ப் பதத்தைப்
பேரா தவனருள் பெற்றிடு மதனல்
முற்றுணர் தாண்டவ மூர்த்தி யனுபவப்
பெற்றியி னுலகோர் பேரின் படையக்
கிளரும்வே தாந்தக் கீரோ ததியைத்
தளர்வறு சமாதித் தாழியி னிறைத்திட்
டகமுறு விசார வனலினற் காய்ச்சி
மகிழ்குரு வாக்கிய மத்தாற் கடைந்து
ஞானகை வல்லிய நவநீ தத்தை
ஆனபே ரன்பின் அளித்தனன்"

# அகராதிகளில்

நா. கதிரைவேற்பிள்ளை தொகுத்த முடிசூட்டு அகராதி, மற்றும் பல புலவர்கள் தொகுத்த அகராதி ஆகியவைகளில் தாண்டவராய சுவாமிகள் என்னுந் தலைப்பின் கீழ்,

> "சோழ தேசத்திலே, நன்னில நகரிலே அந்தணர் குலத்திலே அவதரித்து விளங்கிய இவர். வேதாந்த சாஸ்திர வுண்மை நிலைகண்டு கைவல்லிய நவநீதம் என்னும் நூல்செய்தவர்"

என்று குறிப்பிடப்பட்டுள்ளன.

# ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் சரித்திரம்

## கடவுள் வாழ்த்து

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கங்கைநீர் முதலாய்த் துறைந்துமாட் சியதாய்க்
கவினுறும் கடல்புடை சூழ்ந்த்
துங்கமாம் புவியில் மதுவன மென்னும்
துகளிலா நன்னில நகரில்
தங்கவந் துதித்த தாண்டவ ராயத்
தவத்தவன் சரிதமீண் டுரைக்கப்
புங்கவ முதல்வன் கணபதி மலர்த்தாள்
போற்றியஞ் சலிபுரிந் திடுவாம். 1

## நூல்

சரிதமியற்றலைக் கூறல்

நன்னில மதுவ னேச்சுரன் வரத
நாரணன் நாண்மல ருபய
பொன்னடி மறவா மாதவா னந்தர்
பொற்கொடி யம்பிகை யம்மையார்
தன்னகட் டுதித்த தாண்டவ ராயர்
சற்குரு நாரண ரருளாற்
சொன்னகை வல்யம் விளங்கவாழ்ந் திருந்த
தூயமா சரிதமீண் டுரைப்பாம். 2

## தாய் தந்தைய ரியல்பு

அவ்னியோர் புகழும் நன்னில நகரில்
அமர்ந்திடும் வாத்திம ரென்னும்
தவமுறு மறையோர் குலத்தின னவன்பேர்
சாற்றுதல் மாதவா னந்தன்
தவறிலா வவன்றன் மனையவள் தனக்குச்
சாற்றுபேர் அம்பிகை யம்மையாம்
புவனியி லிவர்கள் இல்லற மதனைப்
புனிதமா யியற்றிவாழ்ந் தனரே. 3

## தந்தையின் துயர்

திருவருள் சிறந்த மாதவா னந்தன்
செழுமறை யவர்க்கெலாஞ் சிறந்தும்
ஒருமையா மதியா லோர்ந்தவே தாங்கம்
உபநிட மாகமா திகளின்
வருமுறை தவறு தொழுகியுஞ் சீல
மனையுட னில்லறம் வளர்த்தும்
அருமக வில்லா வறுமையால் மெலிந்தே
யாழ்பெருந் துயர்க்கட லடைந்தே. 4

## மாதவானந்தர் தம்மனைவிக் குரைத்தல்

அற்பகா லத்தி லழியுமிவ் வுடலம்
அதற்குணன் மகவொன்று கிடைக்கிற்
கற்பக நாட்டி னங்குலப் பிதிர்க்கள்
கவலைதீர்ந் துளமகிழ்ந் திடுவார்
எற்பவப் பயனும் எய்துமா லிதனுக்
கெச்செயல் செய்வதென் றறியேன்
கற்பினால் நினைக்கண் டருந்ததி களிக்குங்
கதிமிகுஞ் சற்குண முடையோய்! 5

என்றுதன் மனையோடுரைத்துமீட் டொருநாள்
இறைவனும் மதுவனே சனையும்
மின்பயில் பஞ்சா யுதங்கரத் தேந்தும்
வேங்கடா சலபதி தனையும்
சென்றுகண் டவர்தஞ் சேவடி வணங்கிச்
செய்திடும் மிருபிரார்த் தனையால்
நன்றுநம் விருப்பிற் கவரருள் புரிவர்
நம்பென மனையவட் குணர்த்தி. 6

மதுவ னேசனைப் பிரார்த்தித்தல்

நற்றினந் தெரிந்து மனையவ ளுடனே
நறும்புன லாடிநன் னியமம்
முற்றிலும் முடித்து மதுவனேச் சுரனை
முறைபணிந் தருள்செய வேண்டி
நற்றவப் பெரியோர் யாவருங் களிப்ப
நவையுறத் தானமும் வழங்கிப்
பற்றறு மனத்தாற் பகவனல் லருளைப்
பலமிகுந் துணையெனப் பற்றி. 7

திருவேங்கடஞ் சென்று பிரார்த்தித்தல்

மனைவியுந் தானும் பயணமாய்ச் சென்று
மகிமையார் வடமலை யடைந்து
கனமுறும் வேங்க டாசல பதியைக்
கண்ணுறக் கண்டடி பணிந்து
கனிவுறத் துதித்து வேண்டுதல் புரிந்து
கதியுறத் தங்கியங் குறங்கத்
தனிமுதல் காக்கு மிறையவன் சங்கு
சக்கரந் தாங்கிய கரத்தோன். 8

### கனவில் இறைவன் அறிவித்தல்

வருமறை யவனின் கனவினில் தோன்றி
வாடன்மின் நற்குணம் பலவும்
உருவமா யுனது கற்புறு மனையின்
உதரமே விடுமொரு புதல்வன்
தரைபுகழ் ஞான நூலியற் றிடுவன்
தவிப்பற மகிழ்கவென் றுரைத்துத்
திருவுரு மறைந்தா னவையுணர் மறையோன்
திடுக்கென வெழுந்துளந் தெளிந்தே. 9

### ஸ்ரீ தாண்டவராயர் தோற்றம்

கருணையங் கடலோ னருளென வடங்காக்
கரையில்பே ருவகையின் மூழ்கி
உரையெலாந் தனது மனையவட் குணர்த்தி
யுற்றனன் றன்னக ரதனில்
வரதனன் றுரைத்த வாசகப் படியே
மனையவள் வயிற்றினிற் கருப்பம்
மருவியே யாறைம் பதுதினஞ் சென்று
மகவினை யீன்றனள் மாதோ. 10

### தோற்றக்காலம்

நுவன்றிடுங் கலியின் நான்கினு யிரத்தைந்
நூற்றொடு பத்தெனு மாண்டில்
கவின்றருஞ் சருவ தாரியாம் வருடம்
கதிதருந் தாண்டவ ராயர்
பவந்தெறப் பவித்தார் பவித்தவந் நாளில்
பலசுப சகுனநேர் தலினுல்
உவந்தன ருலகோர் நீர்நில மாதி
ஒப்பிலா வளமிகுந் தனவால். 11

### தாய்தந்தையர் மகிழ்வுரை

ஈன்றதாய் தந்தை யரனரி யருளால்
ஏற்றவிப் புதல்வனுற் றிடலால்
மான்றவாத் திமர்தங் குலமுங்கோத் திரமும்
வமிசமும் மகிதலத் தவரும்
தோன்றுமாண் புறவும் சூழ்வினை யாவும்
தூளெழத் துறக்கமெய் திடவும்
வான்றவம் மண்மேல் வளரவும் தகுந்த
வாய்ப்புறு மெனமகிழ்ந் துரைத்து. 12

### தாய் தந்தையர் களிப்பு

பெற்றதாய் தந்தை பெருந்துய ரொழிந்து
பெருகுநங் குலமன விருளும்
மற்றவர் மனத்தின் இருள்களு மகற்ற
வந்தெழும் வளர்மதிக் கொழுந்தே
நற்சிவ நாரா யணனருட் கடலின்
நடுவெழு ஞாயிறே நாங்கள்
பெற்றருஞ் செல்வப் பெருக்கமே யென்னப்
பெருங்களிப் படைந்துபுல் லினரால். 13

### சாதகநாமம்

இத்திறம் மகிழ்ந்து மறையவன் மகவுக்
கிசைத்திடும் சாதக நாமம்
வைத்திடக் கருதி இறையருட் பெருக்கால்
வாய்த்தநற் புதல்வனு தலினல்
அத்திரு வருளுக் கொத்தகா ரணப்பேர்
அருட்பிர காசனென் றமைத்தான்
புத்திரன் மிகவும் சுந்தர வடிவாய்ப்
புகழுற வளர்ந்திடும் நாளில். 14

### அன்னப்பிராசனம் முதலியன

காணுறும் மகவின் சுந்தர வடிவங்
காட்சியா லடருங்கண் ணேறு
பூணுமென் றதற்குப் புகல்பரி காரம்
பொருந்துமா றினிதுற வியற்றிப்
பேணுறத் திங்க ளாறினி லன்னப்
பிராசன கன்மமுஞ் செயப்பின்
மாணுற வளர்ந்து தவழ்ந்தெழுந் தோடி
வருசிறு குறவுகொண் டாடும். 15

### அணிகலன் பூட்டல் கல்வி பயிலுதல்

பாலினேர் முத்துப் பவளமே யாதி
பன்மணிப் பூணணி மார்பும்
ஏலகைக் காப்பும் கொலுசுமோ திரமும்
இடையினிற் பொன்னரை ஞாணும்
காலிடுஞ் சிலம்புஞ் சதங்கைகள் பலவுங்
கலகல வெனவிளை யாடும்
பாலனுய்த் திரிந்து பருவமைந் தாண்டிற்
பலகலை பயின்றிடும் நாளில். 16

### கல்வியின் தேர்வு

மாநிலத் தமைத்த பொருளினை மறந்தோன்
மனநினை வுற்றெடுப் பதுபோல்
தானினை யாமல் இருந்துமுன் னுள்செய்
தவப்பய னுதவல்போ லமரர்
வானுறை யமுதம் வாய்த்தபோற் பகவன்
மாவருளென் னுமஞ் சனத்தால்
ஏனை நல் லருத்த மென்னும்வைப் புளக்கண்
ணெதிர்வுறப் பலகலை தேர்ந்தான். 17

முந்நூல் புனைதல், வேதாத்தியயன நன்னெறி யொழுகல்

உத்தம குணமும் அருள்வழி யன்பும்
உருக்கொடு வளருநாள் தந்தை
தத்தம தான மரபினுன் மறையின்
சடங்கின்முந் நூல்புனைந் தனனால்
நித்திய சந்தி வந்தனைக் கடனன்
னியமனை மித்திய முடித்து
உத்தம வேதாத் யயனநன் னெறியி
னுவப்புட னொழுகிடும் நாளில். 18

சாதன சதுட்டய முறுங்காலம்

பாவமாம் நெறியிற் பயமும்புண் ணியமாம்
பணியினில் விருப்பமும் மிகுந்து
சீவகா ருணியம் முதலவாங் குணங்கள்
சிறந்துழ வைம்பரு வத்தில்
மேவரும் வீட்டு நெறியினு லெவர்க்கும்
வியப்புமன் பச்சமு மேவத்
தாவிலா ஞான சாதனம் நான்கும்
சார்ந்திடும் பக்குவ நாளில். 19

ஆராய்வு

மண்ணதே முதலே வகையெனும் பூத
வையகம் வருமிடம் எவிடம்
எண்ணிலா வுயிரைப் படைத்ததா ரியாமா
ரெங்குநின் றிவணடைந் தனமேல்
நண்ணுவ தெவனே விங்கிரு வினைக்கு
நரகமுஞ் சுவர்க்கமு மாகப்
பண்ணியும் வேதா கமம்பகர்ந் ததுமார்
பார்த்தப ரோட்சமா வறியேன் 20

உண்டுறங் கிடலோ டின்றிடல் பரத்தின்
உணர்வுறல் இறத்தலொந் தொழிலுங்
கொண்டெலாத் துயருங் கொண்டழு துலவும்
குறையறி வுறுவிலங் கினைப்போல்
பண்புற நிறைந்த அறிவுறு மனிதப்
படைப்புறு நாமுறல் தகுமோ
மண்டுற மிருத்யு மத்தகத் திருத்தல்
மதித்திடி னனமுதல் ருசியா. 21

கோடிபொன் னளித்தோர் கணத்துவர் ஞானக்
கொளமுயன் றிடினுமஃ துறுமோ
வீடுற வுறுமிவ் வரியவர் ஞான
வீண்செயல் விலங்கிய லன்றோ
வாடுறு மரண பவமுத லாக!
வருந்துய ரனைத்துமற் றிடவே
பாடுறு துயரில் பதத்தினை யறிந்தே
பண்புறுங் கணத்தினை யறியேன், 22

இன்னிலை யெவரா லுணரலா மவரை
யெவரறி விப்பவ ரவரைச்
சன்னிதிப் படுநாள் எந்நாள் என்து
சரீரமோர் கணமுமோ நிலையன்
றென்னவெந் தழலின் மெழுகென வுருக
இவனித யத்தொளித் தொளிரும்
நின்மல விறையே குருவுரு வாகி
நேர்வரு முறையினி யுரைப்பாம். 23

## நாராயணகுருவின் திருவவதாரம்

டகர்கலி நாலா யிரத்துநா னூற்றிரண்
பதிலுறு காளயுத் தியெனுந்
தொகுதமிழ் வருடம் மதிவன மென்வே
தோன்றுமந் நன்னில மதனில்
தகைமிகு வாத்திமாளென வழங்கும்
தவமிகு மறையவர் குலத்தே
மகிமையார் நாரா யணகுரு வரனன்
மாண்புற வவதரித் ததன்பின். 24

## நாராயணகுரு குருவை யடைதல்

சருவமாந் துன்ப நிவிர்த்தியை யடையத்
தத்துவ ஞானமே வேண்டி
மருவுமா கலியின் நான்கிரு யிரத்தைந்
நூற்றிரு டொன்றெனும் வருடம்
வருபிர மாதி யாண்டினிற் புகழாய்
வாழ்சகத் குருவுறு சிருங்க
கிரியடைந் தரிய வித்தியா ரணியக்
கேள்வனுங் குருவரு ளடைந்தே. 25

## நாராயணகுருவின் நூற்பயிற்சியும் துறவும்

வித்தியா ரணியக் குருபர னிடத்தே
வேதங்கள் சூத்திரங் கீதை
வித்தகப் புராடி யாதியா கமமும்
விவேகசூ டாமணி யினிய
முத்தி சொற்பஞ்ச தசிமிகு சீவன்
முத்திவி வேகமா திகளும்
சுத்தமா யறிந்து தெளிந்துசந் நியாசம்
சுகமுடன் அடைந்திருந் தன்னே. 26

### நாராயணகுரு நன்னிலை மடைதல்

கலியுக வாண்டு நான்கினு யிரத்தைந்
நூற்றிரு பத்தினே டாறில்
குலவுகு ரோதி வருடநன் னிலத்தோர்
கோரிவந் தடிபணிந் தழைக்கப்
பலமிகு குரவன் ஆணையின் வணமே
பகருநன் னிலமடைந் தாங்கே
நிலவிடு மிருப்பைத் தோப்பினே காந்த
நிலையவாச் சிரமமார்ந் துடனே. 27

### நாராயணகுரு அருட்பிரகாசர்க்குக் காட்சி யளித்தல்

நித்தனும் பரமன் றிருவரு ளதனால்
நேர்ந்தமுற் றவமது கூட்டப்
புத்தியின் மிகுந்த அருட்பிர காசப்
புனிதமா தவன்வதிந் திருந்த
நித்தில மனையின் முன்புற மான
நிலந்தனில் நடந்துவந் தரிய
தத்துவம் விரும்பும் அருட்பிர காசத்
தவத்தின னெதிருற நின்றான். 28

### அருட்பிரகாசர் குருவைப் பணிதல்

வானினீ ராவி வடிவுறத் திரண்ட
வாறென மன்னுயி ரனைத்துந்
தானிருந் தருளும் பூரணம் நிறைவிற்
சற்றினுங் குறைவுறா திருந்தும்
ஞானபூ ரணநா ரணகுரு வெனவே
நண்ணனல்கண் டருட்பிர காசன்
கானெனல் மறந்து தரணிவே ரற்ற
தருவெனக் குருவடி பணிய. 29

## குருபெயரிடுதலும் அருட்பிரகாசர் அடைக்கலம் புகுதலும்

*சற்குரு வருளாற் கரங்கொடு தாங்கித்*
**தாண்டவா ஞானபே ரின்ப*
*நற்கதி யடையக் கடவையென் றருள*
*நல்லடி யவர்குடி யிருக்கும்*
*பொற்கம லத்தின் போதடிக் கெனத்தன்*
*பொருளுட லாவியுங் கொடுத்து*
*எற்கருள் புரிக வென்றுள முருகி*
*இறையிடந் தொடர்ந்துசென் றிருந்தான்.* **30**

## தாண்டவரின் குருபணி

*பத்தியாற் செய்யும் பணிவிடை யாவும்*
*பரமசற் குருவுள முவப்ப*
*நித்தலுஞ் செய்தே யாதர வதனை*
*நினைவிலுங் கனவிலும் மறவாப்*
*புத்திகொண் டதனு லெழுவகைப் பிறப்பாம்*
*புணரியைக் கடந்துபே ரின்ப*
*முத்தியாங் கரையைச் சேருதற் கான*
*முதிர்ந்தசா தனமுறு நாளில்.* **31**

---

* தாண்டவா என்பதற்கு அகச்சான்று; கைவல்லிய நவநீதம். 2-ஆம் படலம் 176-ஆம் கவி.

*தத்துவ ஞானம் வந்த சந்தோட வதிச யத்தால்*
*நித்தமா டுவன்கா ணென்ற நிலைமுன்ன மேய திந்த*
*சத்திய மதனு லன்றோ தாண்டவா வென்ற ழைத்தார்*
*அத்தனை மகிமை யுள்ளோர் அன்னையும் பிதாவுந் தாமே.*

2

## நாராயணகுரு தாண்டவர்க்குபதேசித்தல்

நாரண குரவன் கருத்துடன் நோக்கி
நணுகுநற் றாண்டவற் கருள்வான்
ஆரண வாக்யந் தத்துவ மசிகாண்
ஐந்துகோ சாதிநீ யன்று
சாரவை நேதி நேதியென் றகற்றச்
சான்றதா மிஞ்சிடுந் தானும்
பூரணப் பரங்கண் டீதலா துலகம்
பொய்க்கன வென்விலென் றறிவாய். 32

நாடுறு நனவிற் கேசமா தியற
நானெனன் முதலவற் றறல்காண்
தோடமாங் கனவிற் றாலதே கத்தும்
சுழுத்தியிற் சூக்கதே கத்தும்
கூடுநிட் டையினிற் காரணு கத்தும்
கொண்டநா னெனன்முத லறல்காண்
நீடுகா ணுனதிவ் வனுபவத் துலகம்
நினைந்தகற் பனையென வறிவாய். 33

பரவிசி ராந்தி யறல்மிருத் தியுவாம்
பகரதா லயமுந் திரிபும்
வருமதா லனர்த்த மனைத்துமுண் டாமவ்
வாறுநற் சுகருமுன் னுளில்
இரவையஞ் சார்ந்து சனகர்பா லறிந்து
சித்தவி சிராந்தியுற் றையம்
திரிபற ஞான ரக்கையுற் றனரால்
தேர்ந்துநீ முயன்றவ்வா றுறுவாய். 34

துக்கமாங் காம் காரண மதுவோ
துதைதனஞ் ஞானத்தா லெழுந்த
பொக்ககங் காரக் கிரந்தியா மவணம்
பொருந்துகா ரணமுற வதனுல்
புக்ககாரியமாந் துக்கக்ா மத்தைப்
போக்கிட முயன்றிடிற் போமோ
மிக்கதுன் பாசை மேவுகா ரணத்தை
விலக்கினக் கணத்தினிற் போமே. 35

*கண்ணனுர் கீதை காமமாம் வைரி
காண்மகா சனமகா பாப்மா
எண்ணுதன் ஞான சாதனத் தொழிப்பாய்
என்னலாற் பகைவ்யஞ் செய்ய
நண்ணுசா தனமாந் தானத்தி னுலும்
நவின்றிடுஞ் சாமபே தத்தும்
கண்ணுற நசியா ஞானதண் டத்தாற்
கடிதறு முற்ளுெழி யென்றே. 36

---

* ஸ்ரீ பகவத்கீதை 3-ஆம் அத்தியாயம் 37-ஆம் சுலோகம் ஸ்ரீ பகவான் வாக்கியம்.

காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ: |
மஹாசனோ மஹாபாப்மா வித்த்யேநமிஹ வைரிணம் || .

(இதன்பொருள்) அர்ச்சுனு! அவ்வனர்த்த மார்க்கத்தில் ஏவுவது இக்காமமேயாம் இதேகுரோதமாம். இரஜோகுணத் துண்டாயதாம். மகாபோகங்களைப் புசித்தும் திருப்தியையடை யாததாம், மகாபாபங்களால் துக்கரூபமான பலப்பிராப்தியை யறிவானுயினும் மீண்டும் அப்பாப கர்மங்களைச் செய்ய ஏவுவ தாம். ஆதலின் இவ்வுலகில் இக்காமத்தையே நீ சத்துருவாக அறிவாய்.

தானருட் குரவன் முனமுன மறிந்து
சதுர்மறை யிரம்மசூத் திரங்கள்
ஆனமால் கீதை யெனும்பிரஸ் தான
வருந்திர யமும்பெருங் குரவர்
ஞானபா டியவார்த் திகமொடா கமமும்
விவேகசூ டாமணி ஞான
மோனஞ்சொல் பஞ்ச தசிமிகு சிவன்
முத்திவி வேகமா திகளும். 37

தாண்டவர் அனுபவமுந்துறவும்

விரிவுற வுரைக்கத் தாண்டவன் கேட்டு
மிகுமன முண்முக மாக்கிக்
கரியெனு மறிவைத் தானென வறிந்து
கனபர வைக்கிய மறிந்து
இரிவுறு மேனை யனைத்துமில் மித்தை
யெனத்தெளிந் தருட்குரு வருளால்
புரிமிகு மகிமை யிலிங்கசந் நியாசம்
புகுந்தனு பவத்திருந் தனனே. 38

தாண்டவர் திடானுபவம்

அனுபவா னந்த முதிர்வினுற் காணும்
அனைத்துல கங்களுங் கனவாய்
நினைசரா சரமாஞ் சித்திர மனைத்தும்
நிறைதன துருவெனும் படத்தில்

புனேந்தகற் பிதமாய்த் தோற்றியா னந்த
பூரணப் பிரமநா மென்னும்
†கனதிட ஞானி யாகியா னந்தங்
கண்டுதாண் டவத்தொடு மிருந்தான். 39

ஸ்ரீநாராயண குருவின் பரிபூரணம்

இவ்வணம் பலவாண்டிருந்தபின் னருளும்
இறைவராம் நாரண குரவர்
செவ்விய கலிநான் காயிரத் தைந்நூற்
றைம்பதோ டொன்றெனு மாண்டிற்
றுவ்விய தமிழிற் சுக்கில வருடம்
தோன்றுவை காசியாம் மாதம்
திவ்விய விசாக வுடுவுறு நாளிற்
றிகழ்ந்தபூ ரணபர மானார். 40

ஸ்ரீநாராயண குருவின் சமாதி வைபவம்

அன்னநா ளருகில் அமர்ந்ததாண் டவரும்
அடுத்தபல் சீடருந் துதித்து
மன்னுநா ரணரின் அருட்டிரு மேனி
மாண்புற மாவபி டேகம்
துன்னுமா செய்து பூசனை புரிந்து
துதைந்தவவ் வாச்சிர மத்தே
நன்னய குகையை யமைத்துமா சமாதி
நலமுறச் செய்துபூ சித்தார். 41

---

† கனதிட ஞானியாய் ஆனந்தத் தாண்டவத்தொடு மிருந்தான், என்பதற்கு அகச்சான்று. கைவல்லியநவநீதம் 2-ஆம் படலம் 175-ஆம் கவி.

என்னபுண் ணியமோ செய்தே னேதுபாக் கியமோ காணேன்
நன்னிலந் தனிலெ ழுந்த நாரணன் கிருபை யாலே
தன்னிய னானே னானுந் தரீயத்தை வீசு கின்றேன்
தன்னிய னின்னு நானே தாண்டவ மாடு கின்றேன்

## ஸ்ரீதாண்டவர் கருணை சிந்தனை

பின்புதாண் டவனார் கருணையார் நினைவாய்
பிறப்புறுஞ் சீவர்கள் பலரும்
துன்புறல் நோக்கி யவர்படும் பாட்டால்
துயரமுற் றுள்ளஞ்சகி யாமல்
மன்பதை யனைத்தும் துன்பெலாம் நீங்கி
வாழ்ந்திடும் மார்க்கம்யா தெனவே
யன்புமீக் கொண்டு செய்வகை யதனை
யறிந்திட வகத்தினுட் டேர்வார். 42

திருமகள் கொழுநன் றேசிகப் பெருமான்
திருவுளங் கனிந்துபங் கயனுக்
கருள்செய வசிட்டன் சத்திநற் பராச
னவன்வியா சன்சுகர்க் கருளிப்
பரவிய முன்னூல் பண்டிதர்க் கன்றிப்
பாலருக் கடாதெதென் றெண்ணிக்
கருணையா லெவர்க்குங் கதிதர விரும்பும்
கலைமிகு தாண்டவர் பின்னும். 43

## ஸ்ரீதாண்டவர் சமாதி யோகத்தில் ஸ்ரீநாராயணகுரு தோன்றியருளல்

அன்றுளோர் சித்தி யறமொடு திறமு
மாயுளும் அருந்தவ வலியும்
இன்றுளோர்க் கின்றென் றெண்ணித்தனக் கருளும்
இறைவனுங் குருபதம் பணிந்து

துன் றுறு மார்க்கம் வேண்டுதாண் டவரின்
தூயமா*யோககா லத்தில்
வென் றிசேர் குருவாம் நாரணர் தோன் றி
மிகுதியாம் ஆசிகள் புரிந்து. 44

ஸ்ரீநாராயணகுரு நூல் செயப் பணித்தல்

அன்பவில் வுலகோ ருளத்தினி லுதித்தங்
கமர்செயுஞ் சத்துரு வான
துன்பவெங் காம மாதிக ளொழியத்
தூயஞா னம்பெறு மாறு
முன்புநீ யுணர்வே தாந்தசாத் திரங்கண்
முழுவதின் சாரமா வெவ்வரும்
இன்பமா வெளிதி னுணரும்வே தாந்த
இனியநூ லொன் றியற் றென்ன. 45

ஸ்ரீதாண்டவர் நூலியற்றி மகிழ்தல்

அருளிறை யுரைத்த வணஞ்செய முயன் று
அனைத்துவே தாந்தசாத் திரத்தின்
பொருளினை யுலகர் எளிதினி லுணர்ந்து
புதுமுறை யுறத்தமிழ்க் கவியால்

---

*யோக காலத்தில் நாரணர் தோன் றி நூலொன் றியற் றென்ன என்பதற்கு அகச்சான் று கைவல்லிய நவநீதம் 2-ஆம்படலம் 179 ஆம் கவி.

ஆரணப் பொருளாம் வித்தி யானந்தம் விளங்க வேதும்
காரணம் குறைவி லாமற் கைவல்ய நவநீ தத்தைப்
பூரண மாக்க வேண்டிப் பூர்வமாம் நன்னி லத்தில்
நாரண குருச் மக்கு நவின் றனர் யோகில் வந்தே.

தெருளுறுங் கைவல் லியநவ நீதந்
திவ்விய முறையினி லியற்றிப்
புரியுமந் நூலால் உலகுறுந் துயரம்
போமென வுளமகிழ்ந் திருந்தார். 46

## ஸ்ரீதாண்டவர் சீடர்கட்குபதேசம் புரிதல்

தன்னைவந் தடுத்த சீடர்கள் தமக்குத்
தத்துவ மசிமகா வாக்யம்
மன்னுப தேசம் புரிந்தனு பூதி
வாய்த்திடும் முறையெலா மியற்றிப்
பன்னுறுங் கைவல் லியநவ நீதம்
பாங்குறச் சிரவணித் திடச்செய்
தன்னிய மறுதன் னிலையுணர்ந் தனந்த
வானந்த முற்றிடப் புரிந்து. 47

---

$ கைவல்லிய நவநீதம், பாயிரம் 1-ஆம் கவி

பொன்னில மாத ராசை பொருந்தினர் பொருந்தா குள்ளம்
தன்னிலந் தரத்திற் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கும்
எந்நிலங் களினு மிக்க வெழுநில மவற்றின் மேலாம்
நன்னில மருவு மேக நாயகன் பதங்கள் போற்றி.

6-ஆம் கவி

படர்ந்தவே தாந்த மென்னும் பாற்கடன் மொண்டு முன்னூற்
குடங்களி னிறைத்து வைத்தார் குரவர்க ளெல்லாங் காய்ச்சிக்
கடைந்தெடுத் தளித்தே னிந்தக் கைவல்ய நவநீ தத்தை
அடைந்தவர் விடய மண்டின் றலைவரோ பசியி லாரே.

## தாண்டவராயர் உலகுபகாரம்

ஓங்குறு முலகர்க் குறும்பிணி பலவும்
உறுவிடம் அலகைமால் முதலாய்த்
தீங்குறு துயர்க ளனைத்துமக் கணத்தில்
திருவுளங் கருதியே தீர்த்து
ஆங்கருள் மதுவ னேச்சுரன் கோயில்
அரியமா லாலயம் வணங்கிப்
பாங்குறு முலகஞ் சுகமுடன் வாழும்
பரிசெலா மியற்றிவாழ்ந் திருந்து. 48

## தாண்டவராயர் பரிபூரணம்

மகிமைத்தாண் டவனார் தமதருட் குரவர்
மனுமுடு தனின்மனுங் கருத்தாய்
மிகுகலி நான்கா யிரத்தறு நூற்று
முப்பதொ டாறெனு மாண்டில்
தொகுஜய வருடம் தோன்றுவை காசி
துலங்குவி சாகமா முடுநாள்
திகழ்பரி பூர்ண பரமவா னந்தச்
சிவபர மாயமைந் தனரே. 49

## தாண்டவராயர் சமாதி வைபவம்

அன்றரு கிருந்த வடிய்வ ராதி
யனைவருந் துதிமிகப் புரிந்து
துன்றுதாண் டவனார் அருளுரு வதனைச்
சூழ்ந்துநன் மஞ்சன தியுடன்
நன்றுநா ரணனார் சமாதியி னருகில்
நலமிகு குகையமைத் ததனில்
வென்றியார் சமாதி செய்திரு விறைக்கும்
விதிமுறை பூசனை புரிந்தார். 50

## சிரத்தையுற்றோர்களின் சுகவாழ்வு

திருவருள் சிறந்த நாரணி குரவர்
திகழ்ந்திடுந் தாண்டவ குரவர்
மருவருஞ் சமாதி யாலய வணக்கம்
வாய்த்துளோர் சிரத்தையுற் றோர்கள்
பெருமையாங் கைவல் லியநவ நீதம்
பிறழ்வறக் கற்றறிந் ததனால்
வருமனு பூதி யடைந்தவர் முதலோர்
வரமிகு சுகமதாய் வாழ்வார். 51

---

## குருவின் சிறப்புங் கைவல்லிய நவநீதச் சிறப்பும்

*குலவுசற் குருவின் பாதக்
குளிர்புனற் றலைமேற் கொண்டால்
உலகினிற் றீர்த்த மெல்லாம்
உற்றபே றடைவார் போல
நலமையா குங்கை வல்ய
நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள்
படித்தஞா னிகளாய் வாழ்வார்.

முற்றிற்று.

* கைவல்லிய நவநீதம் சந்தேகந் தெளிதற்படலம் 180-ஆம் கவி.




## *தாண்டவராய அடிகள் வரலாறு

கங்கைநீர் முதலாய்த் துதைந்துமாட் சியதாய்க்
கவினுறுங் கடல்புடை சூழ்ந்த
துங்கமாம் புவியில் மதுவனம் என்னும்
துகளிலா நன்னில நகரில்
தங்குவந் துதித்த தாண்டவ ராயத்
தவத்தவன் சரிதமீண் டுரைக்கப்
புங்கவ முதல்வன் கணபதி மலர்த்தாள்
போற்றியஞ் சலிபுரிந் திடுவாம்.

### தாய்தந்தையர்

சீரிய நலஞ்சேர் சோழவள நாட்டிலே தஞ்சை மாவட்டத்திலே எந் நிலங்களினுமிக்க எழின்மிகு நன்னிலம் என்னுஞ் சிவப்பதியிலே வாத்திமப் பிராமணர் வகுப்பிலே மாதவாநந்தர் என்னும் பெயருடைய சைவ வைணவ சமரசப் பெரியார் ஒருவர் வாழ்ந்திருந்தார். அவருக்குக் கற்பிற் சிறந்த மனைவியார் அமைந்திருந்தார். அவ்வம்மையாருடைய பெயர் அம்பிகை அம்மையார். இவர்கள் இருவரும் இல்லறத்தை வள்ளுவர் வகுத்து

---

* நன்னிலம் சதாநந்த அடிகளால் டுக செய்யுள் வடிவமாக இயற்றப்பெற்ற வரலாற்று நூலை அடிப்படையாகக்கொண்டு, இவ் வரலாறு கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப் புலவரால் எழுதப் பெற்றது.

நல்லறப்படி இனிது நடத்தியிருந்தனர். மாதவாநந்தர் வேதாகமங்களை ஓதியுணர்ந்த ஒழுக்கசீலர். அன்பு அருள் முதலிய உயரிய பண்புகளெல்லாம் ஒருங்கு அமையப் பெற்றவர். அவருக்கு நெடுங்காலம் மக்கட்பேறு அமைய வில்லை. அதனாற் கணவனும் மனைவியும் உளந்தளர்ந்து துன்பக்கடலில் ஆழ்ந்திருந்தனர்.

### திருப்பதிக்குச் செல்லுதல்

ஒருநாள் மாதவாநந்தர் தம்முடைய மனைவியைப் பார்த்து, "அன்புடையோய்! இவ்வுடல் என்ஞான்றும் நிலைத்திருப்பதன்று; மிக விரைவில் அழிந்துபோகும் இயல்புடையது. நாம் இறப்பதற்குள் நன்மகன் ஒருவனைப் பெறுவோமாயின் நம்முடைய முன்னோர்கள் மனமகிழ்ந்து தெய்வலோக வாழ்வைப் பெறுவார்கள், நம்முடைய பிறவியும் நல்ல பயனுடையதாகும் நன்மகனைப் பெறுவதற்கு யாது செய்வதென்று விளங்கவில்லை" என்று மனங்கவன்று மொழிந்தார். பிறகு இருவரும் ஒருநாள் உரையாடிக் கொண்டிருந்தபோது, "நம்முடைய குலம் விளங்குவதற்கு மதுவனேச்சுரனையும் திருப்பதிமலையின் கண் எழுந்தருளிய வேங்கடாசலபதியையுங் குறித்து வேண்டிக்கொள்வதே சிறந்த வழியாகும்" என்று கூறினார். நன்னாள் ஒன்றிலே மனையாளுடன் தீர்த்த நீரிலே நீராடினார். நாட்கடன்களை இயற்றினார். திரு நன்னிலத்துப் பெருங்கோயிலில் எழுந்தருளிய தேவாதி தேவனுஞ் சிவபெருமானை முறைப்படி போற்றிப் பணிந் தார். தானதருமங்களைத் தம்முடைய ஆற்றலுக்கு ஏற்ற வாறு மனைவியோடு செய்தார். திருப்பதிப் பயணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை எல்லாஞ் செய்துகொண்டு புறப்

பட்டார். அந்நாளிலே இந் நாளைப்போலப் புகை வண்டியோ பேருந்து முதலிய பிறவண்டிகளோ இல்லை. இராமேசுவரம் முதல் இமயம்வரை மக்கள் காலால் நடந்தே பயணஞ்சென்று இறைவழிபாடு செய்தனர். மனைவியோடு திருப்பதிக்குப் புறப்பட்ட மாதவானந்தர் பலநாள் வழிநடந்து திருப்பதியை அடைந்தார். வட வேங்கடமாலைத் திடமாகப்போற்றி வழிபட்டுக்கொண்டு அங்கு சிலகாலந் தங்கியிருந்தார். அவ்விடத்திற் செய்ய வேண்டிய தானதருமங்களையுங் குறைவில்லாமற் செய்தார்.

**கார்வண்ணன் கனவில் அருளல்**

ஒருநாள் வடவேங்கடமால் மாதவானந்தருடைய கனவில் சங்குமாழியுந் தங்கிய கையினராய்த் தோன்றினர். "அன்பனே! உள்ளம் வருந்தாதே. நற்குணங்கள் பலவும் அமைந்த மைந்தன் ஒருவன் உன்னுடைய மனைவியின் வயிற்றிலே தோன்றுவான். அவன் உலகெலாம் மகிழ்ந்து போற்றத்தக்க அறிவுநூல் ஒன்றையும் இயற்றுவான். ஆகவே நீ மனக்கலக்கந்தெளிந்து மகிழ்வுடன் இருப்பாயாக" என்றுகூறி அருள்புரிந்து மறைந்தருளினர். மாதவானந்தர் திடுக்கிட்டு விழித்தார். அவருக்கு மிகுந்த களிப்புண்டாகியது. அருட்கடலாகிய அரவமர் அண்ணல் திருவருள் நம்பால் இவ்வாறு அமைந்ததே என்று எண்ணி உளங்களிகூர்ந்தார். தம்முடைய மனையாளை எழுப்பிக் கனவுநிலையை உரைத்தார். மேலுஞ் சிலநாட்கள் அங்கு தங்கியிருந்து பிறகு புறப்பட்டுத் தம்முடைய ஊருக்கு வந்து சேர்ந்தார். அவருடைய மனங்கவலை தீர்ந்து மனமகிழ்ச்சி சிறந்து விளங்கியது.

### தோற்றம்

வேங்கடத்தமர்ந்த மாயவன் அன்று விளம்பியப்படியே அம்பிகை அம்மையார் கருப்பங்கொண்டார். சூல்கொண்ட மாதுக்குச் செய்யவேண்டிய சடங்குகளையெல்லாம் மாதவானந்தர் சிறப்புடன் செய்தார். ஐயிரண்டு திங்களுஞ் சென்றன. கலிநாலாயிரத்து ஐநூற்றுப் பத்தாம் ஆண்டிற்குச் சரியான (ஆங்கிலம் கி. பி. 1408-ஆம் ஆண்டு) சருவதாரி ஆண்டில் மாதவானந்தருடைய மனைவியார் ஆண்மகவினை ஈன்றனர். உலகிற்பல நற்குறிகள் உண்டாயின. அனைவரும் மகிழ்ச்சி வெள்ளத்துள் திளைத்தனர்.

"நுவன்றிடுங் கலியின் நான்கிறு யிரத்தைந்
 நூற்றொடு பத்தெனும் ஆண்டில்
கவின்றருஞ் சருவ தாரியாம் வருடம்
 கதிதருந் தாண்டவ ராயர்
பவந்தெறப் பவித்தார் பவித்தஅந் நாளில்
 பலசுப சகுனம்நேர் தலினால்
உவந்தனர் உலகோர் நீர்நிலம் ஆதி
 ஒப்பிலா வளமிகுந் தனவால்"

### மகிழ்ச்சியும் புதுமைகளும்

மாதவானந்தரும் அவருடைய மனைவியாரும் மற்றும் இவர்களுடைய வழிமுறையினரும் நம்முடைய வழிமுறை நற்கதி பெற்றது என்று மகிழ்ந்தனர். தந்தையார் தம்முடைய மைந்தருக்குப் பிறந்தநாட் குறிப்பு முதலியன எழுதினார். இறைவனது திருவருளாற் பிறந்தமையின் அருட்பிரகாசர் என்று பெயர் வைத்தார். ஆறுந்திங்களில் உணவூட்டுதல் முதலிய சடங்குகளையும் முறைப்படி செய்தார்கள்.

### அணிகலன் பூட்டல்

குழந்தை நாளொரு மேனியும் பொழுதொருவண்ண மும்மாக வளர்ந்தது. தாய்தந்தையர்கள் குழந்தைக்குச் செய்யவேண்டிய சிறப்புக்களையெல்லாம் செய்தனர். மார்பில் அழகிய நவரத்தினமாலையைச் சார்த்தினர். விரல் கட்கு மோதிரங்கள் அணிந்தனர். இடையில் பொன் னிறலாய அரைஞாண் பூட்டினர். கால்களில் சிலம்பு களும் சதங்கைகளும் பூட்டினர். இவ்வாறு அணிகலன்பல அணிந்து அருமைபெருமையோடு வளர்த்துவரும் நாளில் அருட்பிரகாசருக்கு அகவை ஐந்து நிரம்பியது.

### கல்வி பயிலுதல்

இருமுதுகுரவர்கள் தம் அருமைப் புதல்வரைப் பள்ளிக்கனுப்பிக் கல்விப் பயிற்சியைச் செய்விக்கலாயினர். ஒருவன் நிலத்தின்கண் தான் புதைத்துவைத்த பொருளைப் பிறகு நினைத்துக்கொண்டு மையின் உதவியால் எடுப்ப தைப்போல், இவர் முற்பிறப்பில் தாம் நன்கு பயின்று மறந்திருந்த கல்விப்பொருளை இப்பிறப்பில் இறைவனது திருவருள் என்னும் மையினால் அறிந்து மிக எளிதாகக் கைவரப்பெற்றனர். இவர்பால் அருள் அன்பு முதலிய நற்குணங்களெல்லாம் இனிது வளர்ந்தோங்கின. தக்க பருவத்தில் பூணூல் அணிதல் முதலிய சடங்குகளையும் இயற்றிக் குலநெறிக்கேற்ப மறையோது தலையுஞ் செய்யு மாறு மறைப்பயிற்சியிற் செலுத்தினர்.

### மெய்யறிவு தோன்றுதல்

அகவை பதினைந்து நிரம்பியது அருட்பிரகாசருக்கு. நல்வினையில் விருப்பமும் தீவினையில் அச்சமும் உண்டா

யின. கடவுளிடத்தில் அன்பு உயிர்களிடத்தில் அருள், வீடுபேற்றில் விருப்பு முதலிய பக்குவ நெறிகளும் இவருக்கு தக்கவாறு அமையலாயின. வீடு பேற்று வழியிலே உள்ளத்தைச் செலுத்திய இவர் மண் முதலிய ஐம்பெரும் பூதங்களும் எவ்வாறு உண்டாயின? உலகில் உள்ள உயிர்த்தொகைகளையெல்லாம் உண்டாக்கியது யார்? நாம் யார்? நாம் எங்கு நின்று இங்குவந்து தோன்றினோம்? மேலே எவ்விடத்தைச் சென்று சேர்வோம்? நல்வினைக்கு நல் வாழ்வையும் தீவினைக்குத் தீவாழ்வையும் உண்டாக்கியது யார்? வேதம் ஆகமம் முதலிவைகளை இயற்றினோர் எவர்? அஃறிணை உயிர்களைப்போல நாமும் பிறந்து இறந்து வருந்திக்கொண்டிருத்தல் தகுமோ? சாவுக்கடவுளாகிய நமன் நம்முடைய தலையின்மேல் தங்கியிருத்தலை நாம் எண்ணிப்பார்ப்போமாயின் உணவு முதலிய பொருள்கள் நமக்கு இன்பத்தினை உண்டாக்குவனவாமோ? தேடிய பொருள் கோடியைக் கொடுத்தாலும் ஒரு கணவாணாளை வாங்கிக்கொள்ள முடியுமோ? வீணாகக் கழிந்தவாணாள் திரும்பவந்து பொருந்துமோ? கோடிக் கணக்கான பொருளைக் கொடுத்து ஒருகணநேரம் பொறுத்துக்கொள் என்று கூறினாலும் நமன் பொறுத்துக் கொண்டிருப்பனோ? இதுபற்றியன்றே பெரியோர்களும்

*"தேடப் படும்பொருளைச் சிக்கனவா கப்புதைத்துக்
கோடிக் கொருநிமிடம் கொள்ளுகினும்—கூடாத
வாணாளை வீண்கழிக்கும் மானிடரைப் போன்மயக்கம்
பூணார்பொய் கண்டுதுறப் போர்"

என்றும்

* ஒழிவிலொடுக்கம். துறவு. 1 ஆம் கவி.

†கோடிபொன் அளிப்பன் இன்றே கோடிரோர் மாத்திரைக்குள்
ஊடிய கிளைக்கோர் வார்த்தை உரைத்தடை குவனென்றாலும்
தேடிய கால தூதர் சிமிழ்த்தல்விட் டொழிவ ரேகொல்''

என்றுங் கூறியிருக்கிறார்கள். நாம் வீடுபேற்றையடைவதற்காகப் பெற்ற நம்முடைய அரிய வாழ்நாளை வீணிலே கழித்தல், விலங்கினுடைய செயலாக முடியும். நான் பிறப்பு இறப்பு முதலிய துன்பங்களினின்றும் விடுபட்டு மேலாங் கதியினைப் பெறுதற்கு வழியாகிய பரத்தினை அறிந்து ஒன்றுபடும் நிலை எப்பொழுது பிறக்குமோ அறியேன். நான் யாரைக்கொண்டு மேலான ஞானநெறியை உணரலாம்? அவ்வாறு அறிவிக்கக் கூடியவரை எனக்குக் காட்டுவார் எவர்? என்னுடைய உடல் எச்சமயத்தில் அழிந்தொழியுமோ அறியேன். என்று இவ்வாறு பல வகையாக எண்ணி அழலிடு மெழுகைப்போல் உளம் உருகி நின்றார். மேலுஞ் சிலகாலஞ் சென்றது.

**நாராயணகுரு**

அருட்பிரகாசர் செயல் இவ்வாறாகக் கலியுகம் நாலாயிரத்து நானூற்றெண்பதாம் ஆண்டுக்குச் சரியான (ஆங்கிலம் கி. பி. 1378) காளயுக்தி ஆண்டில் அந்த நன்னிலத்திலே வாத்திமப் பிராமணர் வகுப்பிலே நாராயண குரு என்னும் பெரியவர் ஒருவர் தோன்றினார். அவர் எல்லாத் துன்பங்களினின்றும் விடுபட்டு வீடுபேற்றை அடைய எண்ணினார். கலி நாலாயிரத்து ஐந்நூற்றொன்றாம் ஆண்டுக்குச் சரியான (ஆங்கிலம் கி. பி. 1399) பிரமாதியாண்டில் சிருங்ககிரியை அடைந்து வித்தியாரணியர்

† குசேலோ பாக்கியானம், குசேலர் மேல்கடல் அடைந்தது கவி 109.

என்னும் பெரியார்பால் மறைமுடிவுப் பொருளையுணர்த் தும் அறிவு நூல்களைப் பயின்றார். துறவறத்தை மேற் கொண்டு சீவன் முத்தராய்த் திகழ்ந்திருந்தார்.

### நாராயணகுரு நன்னிலம் நண்ணல்

நன்னிலம்வாழ் பெரியோர்கள் தம்முடைய ஊரிலே தோன்றிய நாராயணர் சிருங்க கிரியிலே சீவன் முத்த ராய்த் திகழ்ந்திருத்தலை உணர்ந்தார்கள். பிறகு அவர்கள் சிருங்ககிரியை அடைந்து நாராயணரைக் கண்டு வணங்கி, "நன்னிலத்திற்கு எழுந்தருளி வந்து எங்கட்கு அறிவு நூல்களைப் போதித்துக்கொண்டு அவ்விடமே எழுந் தருளியிருக்கவேண்டும்" என்று கூறி வேண்டிக்கொண் டார்கள். நாராயண குருநாதனார் நன்னிலத்து நல்லோர் களுடைய வேண்டுகோளுக்கு இணங்கினார். கலி நாலாயி ரத்து ஐந்நூற்று இருபத்தாறும் ஆண்டிற்குச் சரியான (ஆங்கிலம்கி. பி. 1424) குரோதியாண்டில் தம் குருவின் ஆக்ஞை பெற்று நன்னிலத்திற்கு வந்தார். ஆங்கிருந்த இருப்பைமரத் தோப்பில் இருப்பிடமாகத் தவக்குடில் அமைத்துக் கொண்டு அதில் தங்கினார். தம்மையடைந்த பக்குவர்கட்கு அருளுரை வழங்கி வீடு பேற்றிற்காம் வழியை விளங்கக் காட்டிக்கொண்டிருந்தார்.

### அருட்பிரகாசர் அருள்பெறல்

வீடுபேற்றை அவாவிநின்ற அருட்பிரகாசருக்குத் திருவருள் முன்னின்றருளியது. ஒருநாள் அருட்டிரு நாராயணகுரு அருட்பிரகாசருடைய இல்லத்தின் வழியே வந்தார். நாராயண குருவின் பெருமையை நன்குணர்ந்து அவருடைய திருவருளைப் பெறுதற்குக் காலம் பார்த்துக்

கொண்டிருந்த அருட்பிரகாசர் அவருடைய அடிகளிலே அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கினர். தம்மை யாட்கொண்டருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். தம்மை வணங்கிய அருட்பிரகாசரை நாராயண குரு திருக்கைகளால் தாங்கினர். "தாண்டவா! நீ ஞான பேரின்ப நற்கதியை அடையக்கடவாய்" என்று வாழ்த்துரை வழங்கினர். அருட்பிரகாசர் தம்முடைய உடல் பொருளாவி மூன்றையும் அப்புரூம தேசிகனுக்களித்துப் பலவாறு வாழ்த்தி வணங்கினர். அக்குருபரனுடன் சென்று அவருடைய தவக்குடிலையடைந்து அவருடைய பணிகளைப் புரிந்து அருளுரைகளைப் பெற்றுக்கொண்டிருந்தார். இவருக்கு இவருடைய பெற்றோர் இட்ட பிள்ளைப்பெயர் அருட்பிரகாசர் என்பதும் ஆசிரியருடைய அருள்பெற்ற சமயத்திலேதான் தாண்டவராயப் பேர் வழங்கப்பெற்றதென்பதும் பிறகு இவர் தாம் இயற்றிய கைவல்ய நவநீதத்தின்;

> தத்துவ ஞானம் வந்த சந்தோட அதிசயத்தால்
> நித்தம்ஆ டுவன்காண் என்ற நிலைமுன்ன மேஅ றிந்த
> சத்தியம் அதனல் அன்றோ தாண்டவா என்ற ழைத்தார்
> அத்தனை மகிமை உள்ளோர் அன்னையும் பிதாவுந்தாமே

என்னுஞ் சந்தேகந் தெளிதற்படலம் 176 ஆம் பாடலாகிய அகச்சான்றைக்கொண்டும் நன்குணர்ந்து கொள்ளலாம்.

## தாண்டவருக்கு அருளுரை

பிறகு தாண்டவர் மிகு அன்புடன் செய்யும் பணிகளினலும் மனத்தின் பண்பினலும் உவப்புற்ற நாராயண குரு தாண்டவருக்குத் தத்துவ மெய்யறிவு அருளுரை

வழங்கி வேதஉபநிடதங்கள், பிரம சூத்திரம், கீதை ஆகமங்கள், விவேக சூடாமணி, பஞ்சதசி, சீவன் முக்தி விவேகம் முதலிய நூல்களின் பொருள்களையும் விளங்குமாறு போதித்துத் துறவற நெறியையுங் கொடுத்து வாழ்த்துரை வழங்கினார்.

### மெய்யறிவு

அதன்பிறகு தாண்டவர் ஆசிரியரின் அருளுரைப் படியே சிறந்த முறையில் மெய்யறிவுப் பயிற்சி செய்து மெய்யறிவு திடமாகக் கைவரப்பெற்றார். இதனால் எல்லா வகையான துன்பங்களிலிருந்தும் விடுதலையும் பேரின்பத்தின் அடைவாகிய வீடுபேறும் உண்டாகப்பெற்று மெய் யறிவாளராகத் திகழ்ந்தார். ஞானத்தாலுண்டான ஆனந்தத்தினால் தாண்டவமாடினார். நாராயணகுருநாதரிடத்தில் அருளுரைபெற்ற மாணவர்கள் பலருள்ளும் தாண்டவராயரே தலைசிறந்தவராகத் திகழ்ந்தார்.

### குருவின் வீடுபேறு

கலியுகம் நாலாயிரத்தைந்நூற்றைம்பத் தொன்றும் ஆண்டுக்குச் சரியான (ஆங்கிலம் கி. பி. 1449) சுக்கில ஆண்டு வைகாசித் திங்கள் விசாக நன்னாளில் நாராயண குருநாதனார் பேரின்ப வடிவமாகிய வீடுபேற்றை அடைந்தார். அக்காலத்தில் அண்மையில் இருந்த தாண்டவ ராயரும் பிற மாணவர்களும் அன்பர்களும் குருநாதனைப் போற்றிப் புகழ்ந்து பலவாறு வணங்கினர். குருநாதனுடைய திருமேனிக்குத் திருமுழுக்குப் பூசை முதலியவைகள் புரிந்து தவக்குடிலின் பக்கத்தில் அடக்கஞ் செய்து நாள்தோறும் பூசை முதலிய வழிபாடுகள் செய்யலாயினர்.

தாண்டவராயர் அருள்

நாராயண குருநாதனார் நிலை இவ்வாருக்த் தாண்டவ ராயர் தம்மையடைந்த மாணவர்கட்கு அருளுரை வழங் கிக்கொண்டும், மதுவனத்தில் எழுந்தருளிய இறைவனைப் போற்றிக்கொண்டும் மெய்யறிவு நூலாராய்ச்சியில் ஈடு பட்டிருந்தார். உலகிலுள்ள மக்கள் படுந்துன்பத்தைப் பார்த்து அவர்கள்மீது மிகுந்த இரக்கங்கொண்டார். இம் மக்களுடைய துன்பத்தைப் போக்குவதற்கு வழி யாது என்று ஆராய்ந்தார். பெரிய மெய்யறிவு நூல்களைக் கற்றுணர்ந்து மெய்யறிவு பெற்று வீடுபேற்றையடைதல் பேரறிஞர்களாற் கூடுமேயல்லாமல் பொதுவான அறிவு படைத்த மக்களால் இயல்வதன்று இதற்கு யாது செய்வது என்று எண்ணிக் குருநாதராகிய நாராயண தேசிகரை வணங்கிச் சமாதி யோகத்தில் அமர்ந்தார். அந்நிலையில் நாராயண குருநாதனார் தோன்றி அருள்புரிந்தார். "அன் பனே! நீ உலகில் உள்ள மக்களின் மனதை யலைக்கின்ற பகையான துன்ப வடிவ அவாக்களெல்லாம் அகலுமாறும், அவர்கள் தூயமெய்யறிவை யடையுமாறும் நீ ஓதி யுணர்ந்த வேதாந்த நூல்களின் சாரங்கள் முழுவதையும் பக்குவர்கள் அனைவரும் எளிதில் உணருமாறும் வேதாந்த நூல் ஒன்றை இயற்றுவாயாக! அதனால் பக்குவர்கள் எல் லோருக்கும் வீடுபேறு எளிதில் உண்டாவதாம் என்று அருள்புரிந்தனர். நாராயண குருநாதனார் கைவல்ய நவ நீதத்தைத் தாண்டவராயர் இயற்றுதற்கு இவ்வாறு அருள் புரிந்தனர் என்னுஞ் செய்தி கைவல்லிய நவநீதம் சந்தேகந் தெளிதற் படலம் 179 ஆம் செய்யுளில்;

"ஆரணப் பொருளாம் வித்தி யானந்தம் விளங்கவேதும்
காரணம் குறைவி லாமல் கைவல்ய நவநீ தத்தைப்
பூரணம் ஆக்க வேண்டிப் பூர்வமாம் நன்னி லத்தில்
நாரண குருந மக்கு நவின்றனர் யோகில் வந்தே"

என்று கூறியிருக்கும் அகச்சான்றைக் கொண்டும் நன்கு உணர்ந்துகொள்ளலாம்.

கைவல்லிய நவநீதம் இயற்றுதல்

பிறகு தாண்டவராயர் தம்முடைய குருநாதர் திருவருள் நோக்கப்படி நூல் செய்யத் தொடங்கினர். முதலிற் கூறுங்கடவுள் வாழ்த்துக் கவியில்,

"பொன்னில மாத ராசை பொருந்தினர் பொருந்தார் உள்ளம்
தன்னிலந் தரத்திற் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கும்
என்னிலங் களினு மிக்க எழுநிலம் அவற்றின் மேலாம்
நன்னிலம் மருவும் ஏக நாயகன் பதங்கள் போற்றி"

என்று கூறி உலகத்தார்க்குண்டாகும் எல்லாத் துன்பங்கட்கும் காரணமான அவாவை ஒழித்தோர் இயல்பை உலகினர் முதலில் அறிந்து தாமும் அவ்வாறு அவாவறுத்து எல்லாத் துன்பங்களினின்றும் நீங்குவரென்று எண்ணிப், "பொன்னில மாதராசை பொருந்தினர் பொருந்தார் என்று தொடங்கினர். எல்லா நல்வினைப்பதிகளினும் சிறந்த அயோத்தி, மதுரை, மாயா, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை என்னும் ஏழு பதிகளினும் மேலான மதுவனமென்னும் நன்னிலப் பதியினும்; சாங்கியர் முதலியோர் கூறும் ஞானபூமிகள் எல்லாவற்றினுஞ் சிறந்த சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தா பாவனை, துரியம் என்னும் ஞானசப்த பூமிகளினுட்சிறந்த துரிய பூமியாகிய நல்ல நிலத்திலும் பொருந்தி

யொளிரா நிற்கும் ஏகநாயகன் பதங்கட்கு வணக்கம் எனச் சிலேடையாக" என்னிலங்களினும் மிக்க எழுநில மவற்றின் மேலாம், நன்னிலம் மருவும் ஏகநாயகன் பதங்கள் போற்றி" என அமைத்து முடித்தார். இவ்வாறு அமைத்து முடித்திருப்பது அறிஞர் எல்லோரானும் போற்றத்தக்க முறையினதாம். அவ்வாறு முதலில் கடவுள் வாழ்த்து இயற்றியும், எல்லா வேதாந்த நூல்களின் சாரங் களையுஞ் சூத்திரவடிவத்தில் வரிசைப்பட அமைத் தும், அதிகாரிகள் யாவரும் எளிதில் தத்துவத்தை அறிந்து ஐயங்களைப் போக்கிக்கொள்ளும் முறையில் தத்துவ விளக்கம், சந்தேகந் தெளிதல் என்னும் இருபடலங்களாக வகுத்தும், "சுருங்கச் சொல்லல் விளங்கவைத்தல், நவின் றோர்க்கினிமை, நன்மொழி புணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல், முறையின் வைப்பு, உலகமலையாமை, விழுமியது பயத்தல், விளங்கு உதாரணத்தது ஆகுதல் நூலிற்கு அழகெனும் பத்தே" என்று நன்னூல் கூறிய வாறு சுருங்கச் சொல்லல் முதலிய பத்தழகும் பெற அமைத்தும் கைவல்லிய நவநீதம் என்னும் அரிய பெரிய வேதாந்த நூலினைச் செந்தமிழ்ச் செய்யுட்களால் இயற்றி உலகத்திற்கருளினார்.

## நூலின் சிறப்பு

இக்கைவல்லிய நவநீத நூலில் வேதாந்த நூல்களின் பொருளனைத்தையும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் யுக்தி அனுபவங்களோடு பொருந்துமாறு விளக்கியுள்ளார். இந் நூலின் அருமை பெருமையைத் தமிழ் நாட்டினரேயல் லாமற் பிறநாட்டினரும் நன்கு உணர்ந்துகொண்டார்கள். வடமொழி, தெலுங்கு, மலையாளம், ஆங்கிலம், ஜெர்மனி

முதலிய பிறமொழிகளில் இதனை மொழிபெயர்த்து அவ்வந்நாடுகளிற் பயின்று வருகின்றனர். தமிழ்மொழியில் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்துள்ள தமிழ் மறை என்னும் திருக்குறள் எங்கும் புகழடைந்து விளங்குவதைப்போல இக்கைவல்லிய ஞான நூலும் எங்கும் புகழடைந்து சிறந்து விளங்குகின்றது. இக்கைவல்லிய நவநீத நூலுக்குப் பிறைசை அருணசல அடிகள் சிதம்பரம் பொன்னம்பல ஞானதேசிகர் உடையார்பாளையம் ஆறுமுக அடிகள் முதலிய பல பெரியோர்கள் உரையெழுதியுள்ளனர். ஆயினும் அவ்வுரைகளிலெல்லாம் சிதம்பரம் பொன்னம்பல ஞானதேசிகர் உரையே மிகுந்த சிறப்புடையதாக விளங்குகின்றது.

சமாதி யடைதல்

பிறகு தாண்டவராயர் பக்குவர்கட்குக் கைவல்லிய நவநீதத்தைப் போதித்துக்கொண்டும் தம்முடைய தவப் பெருமையால் அடியார்களுடைய அல்லலைப் போக்கிக் கொண்டும் உலகினர்க்குறும் பிணிவிடம் பேய் முதலான துயர்களைச் சங்கற்ப மாத்திரத்தால் நீக்கிக்கொண்டும் திருவருள் மிக்கவராய்ப் பலகாலம் உலகுபகார மூர்த்தியாய் இருந்தார். மெய்யடியார்கள் வேண்டுகோளும் இப்பெரியாருடைய அருளுக்கால் நிறைவேறிக்கொண்டிருந்தது. பிறகு இவர் தம்முடைய குருநாதர் வீடுபேறு வைகாசி விசாகத்திலே நிகழ்ந்ததுபோலத் தம்முடைய வீடுபேறும் வைகாசி விசாகத்திலே அமைக என்று முடிவு செய்து கலியுகம் நாலாயிரத்து அறுநூற்று முப்பத்தாறுக்குச்சரியான (ஆங்கிலம் கி. பி. 1584) சய ஆண்டு வைகாசித்திங்கள் விசாக நன்னாளிலே பரிபூரண பரமானந்த சிவசொரூபமாக அமைந்தார்.

"மகிமைத்தாண் டவனார் தம்தருட் குரவர்
மனுமுடு தனின்மனுங் கருத்தராய்
மிகுகலி நான்கா யிரத்தறு நூற்று
முப்பதொ டாறினில் மேவித்
தொகுசெய வருடம் தோன்றுவை காசி
துலங்குவி சாகமாம் உடுநாள்
திகழ்பரி பூர்ண பரமவா னந்தச்
சிவபர மாயமைந் தனரே"

தாண்டவராயரின் மாணவர்களும் அன்பர்களும் தாண்டவராயருடைய திருமேனியைச் சிறந்த முறையில் அடக்கஞ் செய்து பூசனை புரியலாயினர். மேற்படி சமாதிக் கோயில்களில் உள்ளன்போடு பூசனைபுரிந்து போற்றுகின்றவர்கட்கு எல்லா நன்மைகளும் பேரின்பப் பெருவாழ்வும் எளிதிலே அமைகின்றன.

தஞ்சைமாவட்டம் நன்னில நகரில்
சமாதியாலயங்கொண்டு விளங்கும்

# ஸ்ரீ நாராயண சுவாமிகள்
# தாண்டவராய சுவாமிகள்

# சரித்திரக் குறிப்புகள்

1. சமாதிகள் உள்ள இடம் : நன்னிலம் ஸ்ரீ விநாயகர் கோவில் தெற்குத் தெரு (பூர்வம் இருப்பைத் தோப்பு).

2. சமாதியானவர்களின் விபரம் : சமாதிகள் இரண்டில் தென்புறமுள்ளது ஸ்ரீ நாராயண ஸ்வாமிகள்.

ஜன்ம ஸ்தலம் : நன்னிலம்.

ஜன்ம காலம் : கலியுகாதி 4480-ஆம் ஆண்டு (ஆங்கிலம் கி. பி. 1378) காளயுக்தி வருடம்

மரபு : (வாத்திம) அந்தணர்.

குருவையடைந்த காலம் : கலியுகாதி 4501-ஆம் ஆண்டு (ஆங்கிலம் கி. பி. 1399) பிரமாதி வருடம்.

குரு : ஸ்ரீ ஜகத்குரு வித்தியாரண்ணிய சங்கராச்சார்ய சுவாமிகள்.

செயல் : சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியடைந்ததும், அடைவித்ததும் அதற்குச் சாதனமான சர்வ வேதாந்த சார வடிவ கைவல்லிய நவநீத ஞானநூல் இயற்றும்படி தம் பிரதம சீடரான ஸ்ரீ தாண்டவராய சுவாமிகட்கு அருளியதும்.

சமாதியான காலம் : கலியுகாதி 4551 - ஆம் ஆண்டு (ஆங்கிலம் கி. பி. 1449) சுக்கில வருடம் வைகாசி மாதம் விசாக நட்சத்திரம்.

வடபுறமுள்ள சமாதி : ஸ்ரீ தாண்டவராயசுவாமிகள்.

ஜன்ம ஸ்தலம் ; நன்னிலம்.

ஜன்ம காலம் : கலியுகாதி 4510-ஆம் ஆண்டு (ஆங்கிலம் கி. பி. 1408) சர்வதாரி வருடம்.

மரபு : (வாத்திம) அந்தணர்.

குருவை யடைந்த காலம் : கலியுகாதி 4526-ஆம் ஆண்டு (ஆங்கிலம் கி. பி. 1424) குரோதி வருடம்.

குரு : (மேற்கூறிய) ஸ்ரீ நாராயண சுவாமிகள்.

செயல் : சர்வ துக்கநிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியடைந்ததும், அடைவித்ததும், குருவின் ஆக்ஞையினுல் சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்திக்குச் சாதனமாய், சர்வ வேதாந்த சாரத்தையும் எளிதில் உணரத்தக்க முறையினதாய், வேதாந்த நூல்களின் சிரோமணி போன்றதாய் உலகம் போற்றுவதாய் உள்ள கைவல்லிய நவநீதம் என்னும் ஞான நூலினைத் தமிழ்க்கவிகளினுலியற்றியதும் ஆம்.

(குறிப்பு : கைவல்லிய நவநீத ஞான நூலின் அருமை பெருமையுற்ற முறைமையினைப் பல நாட்டவர்களுமறிந்து சமஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம், ஆங்கிலம், ஜெர்மனி முதலிய பாஷைகளில் மொழிபெயர்ப்புச்செய்து அவ்வந்நாடுகளிற் பயின்று வருகின்றனர் என்பது உலகப் பிரசித்தம்)

சமாதியான காலம் : கலியுகாதி 4636-ஆம் ஆண்டு (ஆங்கிலம் கி. பி. 1534) ஜயவருடம் வைகாசி மாதம் விசாக நட்சத்திரம். (குறிப்பு : தம் குரு வைகாசி விசாகத்தில் விதேக முக்தி யடைந்தது போன்றே தம் விதேக முக்தியும் வைகாசி விசாகத்தில் நிகழக்கடவது என்று சங்கற்பித்து அவ்வாறடைந்தனர் என்பது சரித்திரம்)

3. சமாதியின்மேல் பிரதிஷ்டை : சிவலிங்கம்.

4. பூஜா காலங்கள் : இரண்டு அஃதாவது பகல் இரவு.

5. குரு பூஜாகாலமும் நிகழ்ச்சியும் : வைகாசி மாதம் விசாக நட்சத்திரம் விசேட அபிடேக அலங்கார ஆராதனைகளும், பிரசாதம் வழங்கப்பெறுதலும்.

# கைவல்ய நவநீத மனனதீபம்

இருபத்தெண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

கைவல்ய தத்துவஞ் சந்தேக மதுதெளிதல்
கவியடி யெலாமுரைக்கக்
கரிமுகவ னேயுனது பதமலரை யனுதினங்
கருதிடக் கருணை செய்வாய்
காசெனும் பொன்னில மீன்றளித் தெவருங்
கலங்குமென் னுடையந்தமுங்
கலைசேர் படர்ந்தவே தாந்தமுத் தனைநித்திய
கருதுஞ்ச மஞ் சிரவணம்
மெய்யான சாதன மிவனென் பின்மனை
மிகவே வணங்கி யன்ன
மிதமற்ற தொடர்பவஞ் சொன்னது மடங்கிய
விருத்திவா ராய் தன்னையு
மேவுமென் னைத்தானின் னதுதேக மல்லாமல்
மேனளவு கண்ட தால
மித்தையா மத்தியா வாரோப மிப்படி
விபுரமது தா னுத்தமம்
செய்யுமொரு வழியிக் குணங்களி லீசனுஞ்
சேரமுக் கேம மாயா
செகத்தோற்ற மாஞ்சத்தி தன்னுதி ராசதந்
தெரியுமிவ் வுடற் குக்குமஞ்
செப்பைந்து தாலமே சிரிய வீச்னுர்
சேனுயர் மரங் கற்பனை
சேடனு மரவன்று படமுதா டனந்தமச்
செய்கைதா னிகர் பூன்றமாந்.

வார்ப்பட்டு, ந. செர. அருணசலஞ் செட்டியார் இயற்றியது.

துய்யவா தாரசக மதிலிதுங் கேவலந்
தோற்றமா குஞ் சுழுத்தி
சுத்தியில் வெள்ளியிம் பரினிந்த மாயைச்
சுயம்பிரம மா தத்துவந்
தோன்றவே யிதுநின்க் கறியாத புண்ணியஞ்
சொற்றசபு மாவிண் ணென்றே
துங்கமாம் பூச்சியம் பிறிவதெப் படிகரண
சுகசத்து புஞ்ச கோசம். (1)

முன்புக றசமுனுந் தூலமெல் லாங்கண்ட
முன்னுமறி வுக்கு மதுரம்
மொழியிந்த நீயேத வடநூல்வல் லவர்களு
முதலான குங்கை பன்னி
முடிதத்து வுப்பதங் கடநீரி தஞ்சமா
முயலனுப வா வளிமகன்
முற்றுமறி யையனே சிட்டநீ நானெனு
மோகமாந் தடை யக்கினி

நன்பிரம பாவனை தத்துவவனு வெத்தனை
ஞானமார் சீதீ ரராய்
நத்துகா மம்மாதி பேதகன் மஞ்செசன்ற
நவில்பின்னை மூவ ரரிதாம்
நாட்டரிய பிரமஞா னிகள்சீவ பஞ்சினை
நற்பொறுமை யா றரியமெய்
நாதமுறு கடசொல்லி கானனீ ரிதுகாறும்
நவின்றதத் துவ விளக்கம்

இன்பமா நரர்குழி நற்கருத் தைடைசந்த
மௌனவுரையு மந்திர மூர்த்தி
இசையாக மப்பிரமா ணம்மற்றை வாக்கிய
மினியதன் பதி மூந்திய

இலகுன் முகம்போ லுருக்கியது மெரிகின்ற
திவ்விருத் தியு வஞ்சகம்
ஏதுங்க ருதுமனே மனதுங் களங்கமற்
றேகமா யமன நாசம்
மென்சுத்த மாஞ்சத்து விவகாரத் தேகத்த
மேற்செய்கை யு மறுசுவை
மெய்யுமா டவர்செய்தொ குரவர் சிகாமணி
மிக்ககிளர் மகனையா கேள்
மிகவுமோய்ந் தகனுவி லானுலை யாதெரிதன்
மேலுத்த மகு நல்லவன்
மேவுமீ சனுமாயெல் லாச்சீவ ரகமெனும்
மிகுசட்டி யிவ னயனுமே. (2)

சீரார் தடத்துநர ரின்முத்தி நல்கிய
சிவசொரு பங் காமியந்
திருமருவு மனகயோ கஞ்ஞா யிலக்கமா
செய்கைதவ சீவ பேதந்
தீயான பாவிக ளென்மனம் மழிவிற்
சிறந்ததி கழ்ந்த வீச
திரிமூவ ராமீசர் காரிய மச்சுவஞ்
சேரிந்த சீவ நலமெய்
பூர்மனே விலங்கொன்று கேளிந்த ஞானமும்
பல்போன சன் பத்தியும்
பகர்வேட மாமின்ன வார்துளங் குததர்ப்
பணத்தினிங் கும் மப்படி
பத்திய மணைக்குள்வை நன்மையாந் தினமுமண்
பல்போக மா கள்ளுமூன்
பங்கமா மதுவுலக மாசொருப ஞானம்
பருத்திடு தருத்தி யருளுஞ்

சார்விருத் திஞ்ஞாவ குத்தகன் மங்கண்ட
சருவமுத் தியை சடமதாஞ்
சம்பிரம ரூவீட தாமிந்த நிச்சயந்
தனிமலடி மாயை யென்ப
சலபங்க யாசொப் பனம்பொய்யை மெய்யென்ற
சதமாயை யென்ப ததனை
சாத்தருவ மாகாரி யஞ்சத்தி சத்தனைத்
தானில்லை யாங் கருப்பை.

ஆர்க்குவா யுத்தம்ப னம்மேவு மண்ணில்
அலர்ந்துபூ ரிக்கு ஞானம்
அசத்திலெம் மட்டுதா னன்றியுரு வங்களிர
தாம்தாம சட மானமூ
அதிகவிக நாசச் சரீரசென் மாந்தர
மாரிருளு மன்ன பான
அற்பமா விடயவே கின்றதா கப்படு
மழிவுகெட லான புலியே. (3)

மானஞ்சி றந்தபோ கத்திலிவ் வாறுரைசெய்
மலினவீ னந்த தூங்கும்
மாலுமுத வும்புவியில் நெய்யுமொன் றாகிய
வருமந்த நிச மானது
மனுடனெவ னுகிலு மிந்தவா றைந்துசுக
மாகுகன் குளிரி ளகலும்
மன்னித் தியம்பூர ணம்மசல மின்னவகை
வல்லமிர்க் குணவ மோகந்

தானந்த சத்தேசி வீயாத சுருதியுஞ்
சகலபல கலையு மிதயஞ்
சங்கையற வினவுமுந் தவமுண் டுறங்கித்
தனிப்புலவர் துர்ச் சங்கமி
தத்துவத் தின்மனம் முற்புவி துரியமி
தாமுன் னிலங்க ளுலாந்
தக்கவிப் புவியிலிம் பொல்லாத சிட்டர்புகழ்
தமமந்த மும் பாவிமந்

வானநே ரிருவகை சிஞ்ஞாசு பந்தமனை
மண்ணிற் பிறந்த நானென்
வாகுடமி றைந்தம் மனத்திறு லேயுந்த
வாதனுவச விருத்தி
வன்கார ண்ம்மப்ப டீயிருக் கச்சித்து
மருவுநா னென வென்னபுண்
வளர்தத்து வம்வந்த வித்தியா வாரண
வருகுலவு சற் குருவினே

ஆனவிது வரையிலுஞ் சந்தேக மதுதெளிதல்
ஆகுமிவ் விருத்தம் நாலில்
அடிதொறு மிருக்கின்ற பாவைந்த தாகுமதில்
ஆர்ந்ததத் துவ விளக்கம்
அறுதியோ ரடியினில் இரண்டுபாக் குறைவதாம்
ஆகுமொத் தங் கவிகளோ
அமையுபனி ரெண்டுகழி வாகமுந் நூறிவைகள்
அறியவா னந்த மாமே. (4)

முற்றிற்று.

